வ்யா.—ஹேயப்ரத்யநீகராகையாலே அஸ்ப்ர்ஷ்ட ஸம்ஸாரகந்தராய், முக்திபூமிப்ரதரானவர், ஸகலதேஹ வர்த்திகளான ஆத்மாக்களும ஜ்ஞாநைகாகாரதயாலொத்து, தேவாதிபேதத்தால் ஒவ்வாமலிருக்கும் பலவகைப்பட்ட ஜந்மங்களைப்போக்கி, நித்ய ஸம்ஸாரிகளாயப்போந்த நம்மை நித்யஸூரிகள்கொள்ளும் அடிமையைக்கொள்ளுகைக்காக ஹிதமே ப்ரவர்த்திப்பிக்கும் பிதாவாயும், ப்ரியமேப்ரவர்த்திப்பிக்கும் மாதாவாயும, அடிமைகொள்ளக்கடவ நம்முடைய ஸ்வாமியாயும இப்படி ஸர்வவிதபந்துவாயும, நம்முடைய தண்மையையும், தம்முடைய பெருமையையும்பாராதே நம்முடைய ஸர்வபரத்தையும தாமேயேறிட்டுக்கொண்டு செய்வாராக ஹேயமான நம்முள்ளேபுகுந்து ஒரு நீராகப்பொருந்தினர்; அறிவிலியானநெஞ்சே!, நம்முடைய ஹிதமறிகைக்கு நாம் ஸர்வஜ்ஞராயோ, அவன அஜ்ஞனேயோ, ஹிதத்தைப் ப்ரவர்த்திப்பிக்கைக்கு நாம் ஶக்தராயோ, அவன அஶக்தனேயோ, கார்யஞ்செய்துகொள்ளுகைக்கு நாம ப்ராப்தராயோ, அவன அப்ராப்தனேயோ, தனமேன்மைபாராதே தாழநின்று உபகரிக்குமவனுயிருக்க எத்தாலே நீ துக்கஸாகரத்தில கிடக்கிறது என்று, திருமழிசைப்பிரா னருளிச்செய்த "அத்தனுகி" எனகிறபாட்டும் இந்ஶ்லோகத்துக்கு அர்த்தமாக அநுஸந்தேயமென்கை.

ஆக, இத்தால் ஸ்வீகாராங்கதயா த்யாஜ்யமான தர்மவிஷங்களையும, அந்த தர்மங்களினுடைய த்யாக ப்ரகாரத்தை, அந்த தர்மத்யாக பூர்வகமாகப் பற்றும் விஷயத்தினுடைய ஸௌலப்யாதி குணயோகத்தையும், அக்குணவிஶிஷ்ட வஸ்துவினுடைய ஸஹாயாஸஹத்வ லக்ஷணமான நைரபேக்ஷ்யத்தையும், நிரபேக்ஷவஸ்துவினுடைய உபாயபாவத்தையும, அத்தை உபாயத்வேந ஸ்வீகரிக்கையையும, ஸ்வீகர்த்தமான உபாயத்தினுடைய ஜ்ஞாநஶக்த்யாதி குணயோகத்தையும், அக்குண விஶிஷ்டவஸ்துவிலே ந்யஸ்தபரனுன அதிகாரியையும, அதிகாரிக்கு விரோதியான பாபஸமூஹத்தையும, அப்பாபவிமோசந ப்ரகாரத்தையும, அப்பாபவிமோசகனைப்பற்றின அதிகாரியுடைய நைர்ப்பயத்தையுஞ் சொல்லிற்றாயிற்று.

பெரியஜீயர்திருவடிகளேஶரணம்.

முமுக்ஷுப்படிவ்யாக்யாநம்

சரமஶ்லோகப்ரகரணம்

முற்றிற்று.

---